# மனிதன் புனிதனாக அன்றாட அமல்களும் ஸலவாத்தின் சிறப்புகளும்

மர்ஹூம் ஹாஜி

**மு. ஆஸ் முஹம்மது ராவுத்தர்,**

மர்ஹூமா ஹாஜியா

**ஆ. மர்யம் பீவீ**

ஆ[illegible]ின் நினைவாக இந்நூல் வழங்கப்படுகிறது.

வெளியீடு :

**தாஜ் பப்ளிஷர்ஸ்**

சிந்தாமணிப்பட்டி.

# மனிதன் புனிதனாக அன்றாட அமல்களும் ஸலவாத்தின் சிறப்புகளும்

உர்தூ மூலம் வழங்கியவர் :
மெய்ஞ்ஞானி, மௌலானா
**முஹம்மது அப்துல் ஹை ஸித்தீகீ (ரஹ்)**

உர்தூவில் தொகுத்தவர் :
மௌலானா, அல்லாமா
**முஹம்மது தகீ உஸ்மானீ ஹஜ்ரத்**
தாமத் பரகாதுஹும்

தமிழில் :
மௌலவீ **அ. முஹம்மது வலிய்யுல்லாஹ் யூசுஃபீ**

வெளியீடு :
**தாஜ் பப்ளிஷர்ஸ்**
பள்ளிவாசல் தெரு, **சிந்தாமணிப்பட்டி,**
கரூர் மாவட்டம்.
செல் : 94438 82814, 99767 98911.

# முன்னுரை!

அல்ஹம்துலில்லாஹ் - வஸ்ஸலாது வஸ்ஸலாமு
அலா ரசூலில்லாஹ்

அல்லாஹ் அடியார்களுக்கு கட்டளையிட்டுள்ள சட்டங்கள் இரு வகைப்படும். 1. வெளிரங்கம் சம்பந்தப்பட்டது - இதற்கு ஷரீஅத் என்று சொல்லப்படும். உதாரணத்திற்கு தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் - இவை ஏவல்களாகும். வட்டி, மது அருந்துதல், விபச்சாரம் போன்றவை இவை விலக்கல்களாகும். 2. உள்ரங்கமானது. இதற்கு தரீகத் என்று சொல்லப்படும். உதாரணத்திற்கு பொறுமை, நன்றி, இறை நம்பிக்கை, மனத் தூய்மை போன்ற ஏவல்கள். பொறாமை, கஞ்சத்தனம், முகஸ் துதி, பெருமை போன்ற விலக்கல்கள்.

தரீகத் என்பது, ஷரீஅத்திற்கு அஸ்திவாரம் போன்றதாகும். உள்ரங்கம் சரியாகாமல் வெளிரங்கம் சரியாகாது. எனவேதான் குணத்தை சரியாக்குவது மிக அவசியம் எனக் கூறப்படுகிறது. குணத்தை சீராக்கத்தான் ஆன்மீகத்தில் பல பயிற்சிமுறைகளை திக்ரு, தியானங்களை கடைபிடிக்கப் படுகிறது. குணங்களை சீராக்கிக் கொள்ள நடைமுறையில் ஓர் ஆன்மீக மருத்துவரை தேர்ந்தெடுக்கப்படுகிறது. அவர் தினசரி செய்துவரும்படியான 'திக்ரு' தியானங்களை நாடி வரும் அன்பர்களுக்கு கற்றுத்தருவது வழக்கத்தில் இருந்து வருகிறது. அவர் கூறிய முறைப்படி தொடர்ந்து செய்து வந்தால் உள்ளம் சீராவதை - உணர முடியும். உள்ளம் சீராகி விட்டால் நஃப்ஸை அடக்கி தக்வா உடைய வாழ்வு வாழ்வது சுலபமாகி விடுகிறது.

இன்று நமது உலக ஈடுபாடு அதிகமாகிவிட்டதால் இத்தகைய திக்ரு, தியானங்களுக்கு நேரம் ஒதுக்குவது மிக மிக சிரமமாக ஆகிவிட்டது. எனவே காலத்திற்கு தகுந்தாற்போல் எளிய - அதே சமயம் விரைவில் பயன்தரக்கூடிய செயல் முறைகளைக் காட்டிக் கொடுப்பது அவசியமாகிவிட்டது. இதில் எனது ஆன்மீக ஆசானிடமிருந்து நான் கற்றுக்கொண்ட பாடங்களிலிருந்து பயனுள்ள செயல் முறைகளைக் கூறியுள்ளேன்.

இதன்படி செயல் பட்டு வந்தால் இன்ஷா அல்லாஹ் நோக்கத்தை அடையலாம்.

நேரம் மிகப்பெரும் அருட்கொடையாகும். வயது குறைந்து கொண்டே வருகிறது. எனவே மறுமைக்கு சேகரம் செய்ய தன்னை தயார் செய்துகொள்ள வேண்டும். இன்றே துணிவுடன் செயல்படத் துவங்குங்கள்; அல்லாஹ் உதவி செய்வான்.

★ ★ ★

# அறிமுகம்

எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே!

ஹகீமுல் உம்மத் மௌலானா அஷ்ரஃப் அலீ தானவீ (ரஹ்) அவர்களின் பிரதான கலீபாவும் எனது ஆன்மீக ஆசானுமாகிய ஆரிஃப் பில்லாஹ் டாக்டர் முஹம்மது அப்துல் ஹை ஆரிஃபீ ஹஜ்ரத் அவர்கள் வாரந்தோறும் திங்கள்கிழமை ஆன்மீக விளக்க உரையாற்றி வருகிறார்கள்.

ஹிஜ்ரீ 1398 ஜமாதில் ஆகிர் பிறை 21 திங்கள் உள்ளம் சீராக தினசரி செய்ய வேண்டிய திக்ரு - தியானம் பற்றி தெளிவாக அதே சமயம் சுருக்கமான முறையில் உரை நிகழ்த்தினார்கள். அதனால் சபையோர்களுக்கு முழுப்பயன் ஏற்பட்டது.

ஆன்மீக ஆர்வமுள்ள அனைவருக்கும் பயன் ஏற்பட வேண்டும் என்ற நன்நோக்கில் அதை நூல் வடிவில் தொகுத்து ஹஜ்ரத்திடம் காட்டி அனுமதி பெற்ற பிறகு வெளியிடப் படுகிறது. படித்து பயன்பெற அல்லாஹுதஆலா தவ்ஃபீக் செய்வானாக.

ஆமீன்.

ஹஜ்ரத்தின் ஊழியர்
**மௌலானா முஹம்மது தகீ உஸ்மானீ ஹஜ்ரத்**

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ *

## அன்றாட அமல்கள்

1. கால அட்டவணை ஏற்படுத்தி காரியங்களை அதன் அதன் நேரத்தில் செய்துவரப் பழக வேண்டும். இதில் பரகத் ஏற் படுகிறது.

2. ஷரீஅத் கூறும் ஏவல்களை எடுத்து நடக்க வேண்டும். விலக்கல்களை விட்டும் தவிர்ந்திருக்க வேண்டும்.

3. முடிந்தளவு ஜமாஅத்துடன் தொழுதுவர வேண்டும். ஷரீஅத் கூறும் தக்க காரணங்களின்றி ஜமாஅத்தை விடக் கூடாது. பள்ளிக்குள் ஒழுக்கங்களைப் பேண வேண்டும்.

4. சுப்ஹூவிற்குப் பிறகு அல்லது கிடைக்கும் நேரத்தில் கீழ் வரும் செயல்களை தினம் விடாமல் செய்துவர வேண்டும்.

1. தினம் ஒரு ஜுஸ்வு குர்ஆன் ஓதி வரவேண்டும். முடியா விட்டால் அரை ஜுஸ்வும் அல்லது முடியாவிட்டால் கால் ஜுஸ்வு அவசியம் ஓதிவர வேண்டும். தஜ்வீத் முறைப்படி ஓத முயல வேண்டும். குர்ஆன் ஓத முடியாமல் இருந்த நாட்களில் 200 - தட்வை குல்ஹுவல்லாஹு சூறா ஓதிக் கொள்ள வேண்டும்.

2. குர்ஆன் ஓதிய பிறகு தினமும் ஒரு மன்ஜில் முடியாவிட் டால் அரை மன்ஜில் முனாஜாதெ மக்பூல் ஓதிவர வேண் டும். அர்த்தத்தையும் கவனத்தில் வைப்பது நல்லது.

3. சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல்லாஹில் அழீம் 100 தடவை.

4. சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் 100 - தடவை.

5. அஸ்தஃபிருல்லாஹ ரப்பீ மின்குல்லி தன்பின் வஅதூபு இலைஹி 100 - தடவை.

6. அல்லாஹு ம்ம ஸல்லி அலா ஸய்யிதினா வமவ்லானா முஹம்மதினின்னபிய்யில் உம்மிய்யி வஅலா ஆலிஹி வஅஸ்ஹாபிஹி வபாரிக் வஸல்லிம் 100 - தடவை.

7. லாஹவ்ல வலா குவ்வத இல்லா பில்லாஹ் 100 - தடவை.

8. லாஇலாஹ இல்லல்லாஹு இரண்டாயிரம் அல்லது குறைந்தது 500 - தடவை.

9. ஐந்து நேரத் தொழுகைகளுக்குப்பின் பாத்திஹா சூறா, ஆயத்துல் குர்ஸீ, குல்யா அய்யுஹல் காபிரூன், குல்ஹு வல்லாஹு அஹத், குல்அவூது பிரப்பில் பலக், நாஸ் ஒவ்வொரு தடவை, பிறகு சுப்ஹானல்லாஹ் 33 - தடவை. அல்ஹம்து லில்லாஹ் 33 - தடவை. அல்லாஹு அக்பர் 34 - தடவை.

10. இஷா தொழுகைக்குப்பின் சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி சுப்ஹானல்லாஹில் அழீம் 100 - தடவை சுப்ஹானல் லாஹி வல்ஹம்துலில்லாஹி வலாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் -100 தடவை. இஸ்திஃபார் - 100, ஸலவாத் - 100.

## இரவு தூங்கும் முன்

ஆயதுல் குர்ஸீ, ஆமனர்ரசூல், ஆலு இம்ரானுடைய கடைசி ஆயத் - இன்ன பீ கல்கிஸ் ஸமாவாத்தி வல் அர்ளி - யிலிருந்து லா துஹ்லிபுல் மீஆத் வரை.

தபாரஹ்கல்லதீ சூறா, இக்லாஸ் சூறா 200 - தடவை முடியாவிட்டால் 11 தடவை. இதுவும் முடியாவிட்டால் பலக், நாஸ் - மூன்று தடவை ஓதி தன்மீது ஊதிக்கொள்ள வேண்டும். வீட்டைச் சுற்றி கற்பனையாக ஒரு பாதுகாப்பு வட்டம் இடுவதாக எண்ணிக் கொள்ள வேண்டும்.

மேற்கூறியவைகளைத் தவிர நேரம் கிடைக்கும்போதும் நடக்கும்போதும் அமர்ந்திருக்கும்போதும் பயணம் செய்யும் போதும் "லாஇலாஹ இல்லல்லாஹு" என்று திக்ரு செய்துவர வேண்டும். இடைஇடையே முஹம்மதுர் ரசூலுல்லாஹ்வை

சேர்த்துக்கொள்ள வேண்டும். இதுதவிர முடிந்தளவு ஸலவாத் ஓதிவர வேண்டும்.

இப்படி செய்து பழக்கப்படுத்திக்கொண்டால் வேலையில் இருக்கும்போதும் உள்ளம் திக்ரு செய்து கொண்டேயிருக்கும். இன்ஷா அல்லாஹ்.

5. ஒவ்வொரு செயலைச் செய்யும்போதும் அதற்குரிய சுன்னத்தான துஆக்களை ஓதிவர வேண்டும்.

6. அவ்வப்போது நல்லோர்களின் சகவாசத்தில் இருந்துவர வேண்டும். பெரியார்களுடன் சேர்ந்திருக்க வேண்டும். அவர்களின் நஸீஹத்களை (உபதேசங்களை) கேட்க வேண்டும். அவர்களின் துஆக்களை பெற வேண்டும்.

7: ஹகீமுல் உம்மத் மௌலானா அஷ்ரஃப் அலீ தானவீ (ரஹ்) அவர்களின் உபதேச மற்றும் பொன்மொழி நூல்களை குறைந்தபட்சம் தினம் ஒரு பக்கமாவது படித்துவர வேண்டும். இதனால் கல்வியில் விசாலம், செயல்படும் ஆர்வம் - ஊக்கம் பிறக்கும்.

இதுவரை கூறப்பட்டவை அனைத்தும் ஹதீஸில் வந்த திக்ரு துஆக்களாகும். இவற்றை விடாமல் தொடர்ந்து செய்துவர வேண்டும். இதைத்தவிர கீழே கூறப்போகும் செயல்களை முடிந்தளவு செய்து வாருங்கள். தொடர்ந்து செய்து வருவதால் மிகப்பயன் உள்ளது.

1. தஹஜ்ஜுத் தொழுவது : குறைந்தது நான்கு ரக்அத், கூடுதல் பனிரண்டு ரக்அத் தொழ வேண்டும். தஹஜ்ஜுத் தொழ எழுந்திருக்க இயலாதவர்கள் இஷாவுடைய வித்ருக்கு முன் இரண்டிரண்டாக நான்கு ரக்அத் தஹஜ்ஜுத் நிய்யத்தில் தொழுது வரலாம்.

2. தஹஜ்ஜுத்திற்குப் பிறகு முடியாவிட்டால் பஜ்ருக்குப் பிறகு :

லாஇலாஹ இல்லல்லாஹ் - 200 தடவை

இல்லல்லாஹ் - 400 தடவை

அல்லாஹு அக்பர் - 600 தடவை
அல்லாஹ் - 100 தடவை
திக்ரு செய்து வருவது.

3. தினம் இஷ்ராக் தொழுகை, ளுஹா தொழுகை, அவ்வாபீன் தொழுகை, அஸருடைய முன் சுன்னத் நான்கு ரக்அத் இவற்றைத் தொழுதுவர வேண்டும்.

4. தினம் "யாஸீன் சூரா" ஒரு தடவையும் "முஜ்ஜம்மில் சூரா" ஒருதடவையும் ஓதி வருவது.

5. வெள்ளிக்கிழமை கஹ்ஃப் சூறா ஓதுவது.

6. வாரம் ஒரு முறை தஸ்பீஹ் நஃபில் தொழுகை தொழுவது.

7. தினம் பஜ்ருடைய சுன்னத்திற்கும் பர்ளுக்கும் இடையில் முடியாவிட்டால் பஜ்ருக்குப்பின் ஸலவாத் 11 தடவை, ஃபாத்திஹா சூறா 41 தடவை, ஸலவாத் 11 தடவை ஓதிவர வேண்டும். இது அதிகமான பெரியார்களின் வழமையாகும். இதனால் எண்ணிலடங்கா முடிச்சுகள் அவிழ்கிறது. பிரச்சனைகள் நீங்கிவிடுகிறது. நாடிய பலன் கிடைக்கிறது.

## அவசிய எச்சரிக்கை

மேற்கூறிய திக்ரு - வஜீபாக்கள் ஓதுவதற்குப் பெயர் ஆன்மீகம் அல்ல. தக்வா - இறையச்சம் உருவாகி முழு ஷரீஅத் படி நடப்பதற்குப் பெயர்தான் ஆன்மீகம். தக்வாவை உருவாக்க உதவியாக இருப்பவைதான் திக்ரு - துஆ, திலாவத் போன்றவை. பாவங்கள் செய்யாமல் இருப்பதாலும் கடமைகளைச் செய்வ தாலும்தான் இறை திருப்தி கிடைக்கும். இறை திருப்தியை அடைவதுதான் ஆன்மீகத்தின் குறிக்கோள்.

எனவே நாம் நமது 1. கொள்கை, 2. வணக்கம், 3. கொடுக் கல் வாங்கல், 4. பண்பாடு, 5. குணம் ஆகிய ஐந்திலும் மார்க்கம் கூறும் முறைப்படி வாழ வேண்டும். தன்னை முழுவதும் சீராக்க

இறுதி மூச்சுவரை முயன்று கொண்டே இருக்க வேண்டும். இதற்காக முஜாஹதா - மனதுடன் போராடிக்கொண்டே இருக்க வேண்டும். நமது கண், காது, நாவு ஆகிய முக்கிய மூன்று உறுப்புகளையும் பாவங்களிலிருந்து பாதுகாத்து வர வேண்டும். சுன்னத்துகளை அறிந்து அதன்படி வாழ்வை அமைக்க வேண்டும். சுன்னத்துகளை அறிய "உஸ்வயே ரசூலே அக்ரம்" என்ற நூலை பார்க்கவும். சுன்னத்படி நடப்பதால் தான் இறைநேசம் கிடைக்கும். எந்தச் செயல் செய்தாலும் நிய்யத் - எண்ணம் சரியாக இருக்க வேண்டும். இறை நெருக்கமும், பொருத்தமும் பெறவே இக்காரியங்களைச் செய்கிறேன் என எண்ண வேண்டும்.

## சில முக்கிய செயல்கள்

துற்குணம் நீங்கவும் நற்குணம் உருவாகவும் தனி முயற்சி அவசியம். ஷைகு என்ற ஆன்மீக மருத்துவ நிபுணரை அணுகி சிகிச்சை எடுத்து அவர் சொற்படி நடந்துவந்தால் குணம் சீர்பெறும். இங்கு நான்கு செயல்கள் கூறப்படுகிறது. அதன்படி நடந்துவந்தால் இறைத்தொடர்பு ஏற்பட்டு நமதுநிலை சீராகும்.

### 1. நன்றி செய்ய வேண்டும்

அல்லாஹுதஆலா நமக்குச் செய்த உபகாரங்களை எண்ணி எண்ணி அவனுக்கு நன்றி செலுத்திவர வேண்டும். ஈமானை தந்ததற்கு அல்ஹம்துலில்லாஹ் சுகத்தை தந்ததற்கு அல்ஹம்துலில்லாஹ் என ஒவ்வொரு நிஃமத்தையும் எண்ணி எண்ணி அல்ஹம்துலில்லாஹ் அல்லாஹும்ம லகல்ஹம்து வலகஷ் ஷுக்ர் என்று கண் விழித்ததும் இரவு உறங்குவதற்கு முன்பும் சொல்லிக்கொள்ள வேண்டும். மனதிற்கு மகிழ்ச்சி ஏற்படும் சமயங்களிலெல்லாம் நன்றி செலுத்த வேண்டும். சிரமம் ஏற்படும் சமயத்திலும் நம்மிடம் உள்ள மற்ற எண்ணற்ற நிஃமத்துகளை எண்ணிப்பார்த்து நன்றி செலுத்த வேண்டும். இப்படிச் செய்தால் துன்பத்திலும் மன அமைதி கிடைக்கும். நன்றி செலுத்துவதால் பெருமை, பொறாமை, பேராசை, வீண்

விரயம், கஞ்சத்தனம் போன்ற பேரழிவை உருவாக்கும் பெரு நோய்கள் நீங்கும்.

## 2. பொறுமை கொள்ள வேண்டும்

நமக்குப் பிடிக்காத - துன்பம் தரும் எத்தனையோ செயல்கள் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கும். இது இறைவனின் சோதனையாகும். இதுபோன்ற துன்ப நேரங்களில் இது அல்லாஹ்வுடைய நாட்டத்தில் நடக்கிறது. இதில் நமக்கு ஏதோ நலவுகள் புதைந்து இருக்கக் கூடும் என கருதி பொறுமையாக இருக்க வேண்டும். துன்ப சமயங்களில் "இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்" என்று கூறிக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்வதால் விதியைப் பொருந்திக் கொள்ளும் மனப் பக்குவம் ஏற்படும். மனதிற்கு அமைதி கிடைக்கும், கோபம், பழி வாங்கும் எண்ணம் உருவாகாது.

## 3. பாவமன்னிப்புக் கேட்க வேண்டும்

அல்லாஹ்வுக்கு மாறு செய்யாமல் இருக்க வேண்டும். அறிந்தோ அறியாமலோ பாவம் ஏதேனும் செய்துவிட்டால் உடனே தவறை உணர்ந்து அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். இஸ்திஃபார் செய்ய வேண்டும். அல்லாஹுஃம்மங்ஃபிர்லீ, அஸ்தங்ஃபிருல்லாஹ் என ஓத வேண்டும். இப்படிச் செய்வதால் ஈமான் பாதுகாக்கப் படுகிறது. தவ்பா செய்ய உள்ளம் விரும்பும்.

## 4. பாதுகாப்புத் தேடுவது

இன்று எங்கு பார்த்தாலும் விபத்துகளும், அபாயங் களும், நோய்களும் ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறது. எப் பொழுதும் ஒரு பயம் இருந்துகொண்டே இருக்கிறது. எப் பொழுது என்ன நடக்கும்? என்ற அச்சம் இருக்கிறது. பாவங் கள் செய்துவிடுவோமோ என்ற பயம் இருக்கிறது. நோய் பற்றிய பயம் இருக்கிறது. இப்படி எந்த பயம் உருவானாலும் உடனே அல்லாஹ்வின்பால் உள்ளத்தை முன்னோக்கி யா அல்லாஹ் என்னை பாதுகாப்பாயாக அல்லாஹுஃம்மஃசிம்னீ அல்லாஹுஃம்ம ஆஃபினா யாஹய்யு யாகய்யூம் பிரஹ்மதிக

அஸ்தஙீஸ் என்று ஓதிக்கொள்ள வேண்டும். அல்லாஹ் நம்மைப் பாதுகாப்பான். அவனின்றி அணுவும் அசையாது.

## இருவேறு மனோ நிலை

முஃமின்களுக்கு - மேற்படி முறையில் நடப்பவர்களுக்கு ஆன்மீக பயிற்சி செய்யும் ஆரம்பமானவர்களுக்கு இரு நிலைகள் ஏற்படுவது இயல்பே.

**1. கBப்ஜ் - மன இறுக்கம் :-** ஏதேனும் கவலை மனதை கவ்விக்கொள்ளும், வாழ்க்கை ருசிக்காது; வெறுப்பாக இருக்கும். எதிலும் உள்ளம் லயிக்காது; நிராசையாக இருக்கும். சோம்பலாக இருக்கும். வணங்க ஆர்வம் இருக்காது. உலகமே சுருங்கித் தெரியும். மறுமை பயம் வரும். நான் மிக மிக மோசமாக இருக்கிறேன் என்று சுய இரக்கம் வரும். மகிழ்ச்சி, ரசனை எதுவும் இருக்காது. மனம் திறந்து பேச, எழுத மனம் வராது. இந்நிலை ஏற்பட்டால் பயப்படக் கூடாது. இதிலும் நிறைய அந்தரங்க பயன்கள் இருக்கவே செய்கின்றன. இதுபோன்ற சில நேரங்களில் அல்லாஹ்விடம் சுகத்தை வேண்டி துஆ செய்ய வேண்டும். அதிகம் இஸ்திஃபார், ஸலவாத் ஓதிவர வேண்டும். பொறுமையாக இருக்க வேண்டும். பொறுமையாளர்களுடன் அல்லாஹ் இருக்கிறான்.

**2. Bபஸ்த் - மன விரிவு :-** மகிழ்ச்சி பெருக்கெடுத்து ஓடும். சுறுசுறுப்பாக இருக்கும். உள்ளத்தில் இன்பம் ஏற்டும். வணக்கங்களில் ஆர்வம் ஏற்படும். இறைவனை நெருங்கிவிட்டதாக உணர்வு ஏற்பட்டு ஆனந்தம் உண்டாகும். வாழ்க்கை ருசிக்கும், உள்ளம் விசாலமாக இருக்கும். இத்தகைய நிலைமை ஏற்படும்போது அல்லாஹ்விற்கு நன்றி செலுத்த வேண்டும். இது அல்லாஹ் அருளிய நிஃமத் என கருத வேண்டும். மேற்கூறிய துன்பமான, இன்பமான இரு நிலைகள்போல் மற்றும் பல நன்மைகள் ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். இறுதியில் அல்லாஹ் அவன் அருளால் நிஸ்பத் (இறை தொடர்பு) என்ற உயர்ந்த நிலைமையைக் கொடுத்து கண்ணியப்படுத்துவான். இந்நிலை ஏற்படு

வதுதான் ஆன்மீகப் பயணத்தின் ஒரே லட்சியமாகும். நிஸ்பத் என்றால் இறைவன் நம்மைப் பொருந்திக்கொள்வது. இந்நிலை ஏற்பட்டுவிட்டது என்பதற்கு அறிகுறி என்னவென்றால் வணக் கங்கள், ஏவல்களின் பக்கம் இயல்பான ஆர்வமும் பாவங் களின் பால் இயல்பான வெறுப்பும் ஏற்படும். இப்படி ஏற்பட்டு விட்டால் மார்க்கப்படி நடப்பது இயல்பாக ஆகிவிடும். பிறகு அல்லாஹ் பல குணங்களைக் கொடுத்து கண்ணியப் படுத்துவான்.

## வஸ்வஸா

சமயங்களில் மனதில் ஷைத்தானுடைய ஊசலாட் டங்கள் ஏற்படும். கெட்ட எண்ணங்கள் உருவாகும். பாவம் செய்ய மனம் துடியாய் துடிக்கும். அல்லாஹ்வின் மீதுள்ள நம்பிக்கை பலகீனமாகும். இஸ்லாத்தின் மீதே ஐயங்கள் ஏற்படும். தொழுகையை விட்டுவிடலாம், நோன்பை விட்டு விடலாம் என்று எண்ணங்கள் வரும். என்ன செய்து எதற்கு ஆகிறது என்ற ஓர் நிராசை உள்ளத்தில் உதயமாகும். இதைக் கண்டு பயப்பட வேண்டாம். சகிப்புத் தன்மை அவசியம். மனதில் வருவதன்படி ஒருக்காலும் செய்துவிடக் கூடாது. மனதை அடக்க வேண்டும். துணிந்து நற்செயல்கள் செய்துவர வேண்டும். மன ஊசலாட்டங்களின்பால் கவனம் செலுத்தக் கூடாது. இதை சட்டை செய்யக் கூடாது. அப்படிப்பட்ட வஸ்வஸா வரும்போது மார்க்க நூல்களைப் படிக்கலாம். பயான் சபைகளுக்கு செல்லலாம். அஸ்தங்ஃபிருல்லாஹ் ஓத வேண்டும். யாஹய்யு யாகய்யூம் பிரஹ்மதிக அஸ்தகீஸ் ஓதிவர வேண்டும். அல்லாஹ் பாதுகாப்பான்.

## அடியார்களுக்குரிய கடமைகள்

அடியார்களுக்குரிய கடமைகளில் மிக கவனம் தேவை. இதில் குறைபாடு செய்யக்கூடாது. யாருக்கும் எந்தத் தொல்லை யும் தரக்கூடாது. யார் மனதையும் புண்படுத்தக் கூடாது. அல்லாஹ்வுக்குரிய கடமைகளில் குறை இருப்பின் அல்லாஹ்

மன்னிப்பான். அடியார்களுக்குரிய கடமைகளில் குறை இருந்தால் அவர்கள் மன்னிக்காதவரை அல்லாஹ் மன்னிக்க மாட்டான். எனவே அவரவர் கடமையை உணர்ந்து நிறைவு செய்து வர வேண்டும்.

**அடியார்களின் கடமை பல விதமாக உள்ளது**

1. பெற்றோருக்கு செலுத்த வேண்டியவை.
2. கணவன் மனைவிக்கும், மனைவி கணவனுக்கும் செலுத்த வேண்டியவை.
3. பெற்ற பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டியவை.
4. உற்றார் உறவினர்களுக்குரியவை.
5. பொது முஸ்லிம்களுக்குரியது.

முடிந்தளவு எல்லோருக்கும் உபகாரம் உதவி செய்துவர வேண்டும். மறப்போம் மன்னிப்போம் என்ற பெருந்தன்மை வேண்டும். பிறர் மனதை புண்படுத்தி இருப்பின் மன்னிப்புக் கேட்க வெட்கப்படக்கூடாது. பொறாமை, குரோதம், விரோதம் பெரும்பாவமாகும். எல்லோருக்கும் நல்லதை நாட வேண் டும். துஆ செய்ய வேண்டும். நல்லதை ஏவி தீமையைத் தடுக்க வேண்டும்.

## தனக்குரிய கடமை

பிறருக்குச் செய்ய வேண்டிய கடமைபோல் தனக்குத் தானே செய்ய வேண்டிய கடமையும் உள்ளது. நபி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள். நிச்சயமாக உமது நஃப்ஸிற்கு செய்ய வேண்டிய கடமையும் உள்ளது. (ஹதீஸ்)

தனக்குச் செய்ய வேண்டிய முதல் கடமை உடல் நலனை பேணிப் பாதுகாப்பதாகும்.

நோய் வராமல் தற்காப்பு செய்ய வேண்டும். வரும்முன் காப்போம் என்ற விதியைக் கடைப்பிடித்து நடக்க வேண்டும்.

1. ஹலாலான - சுத்தமான சுகாதாரமான முறையில் தயாரான உணவுகளையே உட்கொள்ள வேண்டும். உடல் ஆரோக்கிய மருந்துகளை பயன்படுத்திவர வேண்டும்.

2. தினம் சிறிது ஓய்வு எடுக்க வேண்டும். இதற்குத்தான் "கய்லூலா" மதிய உணவுக்குப்பின் சிறிது நேரம் ஓய்வு எடுப்பது உள்ளது.

3. தினம் ஏதேனும் எளிய உடற்பயிற்சி செய்துவர வேண்டும்.

4. மனதிற்குப் பிடித்த ஆகுமான பொழுதுபோக்கு அம்சங்களில் சிறிது நேரம் ஈடுபடலாம்.

5. எதிலும் அவசரம் கூடாது. நடுநிலையைக் கடைப்பிடிக்க வேண்டும். உடல் நலனுக்குக் கெடுதி ஏற்படும் எதையும் செய்யக்கூடாது.

## சுருக்கம்

மேற்கூறிய முறைப்படி தொடர்ந்து நடந்துவந்தால் ஈருலக வெற்றி கிடைக்கும். இறைபொருத்தம் கிட்டும். வேறு எந்த உலகாதாய நோக்கமும் இருக்கக் கூடாது.

நமக்கு குடும்ப மருத்துவர் இருப்பதுபோல் திறமைமிகு மார்க்கப்பற்றுள்ள ஆன்மீக குணநல மருத்துவர் ஒருவரை தேர்ந் தெடுத்துக்கொள்ள வேண்டும். அவருடன் தொடர்பு வைத்து தன்னை சீர்திருத்திக்கொள்ள வேண்டும்.

அப்படிப்பட்ட குரு கிடைக்காவிட்டால் ஹகீமுல் உம்மத் மௌலானா அஷ்ரஃப் அலீ தானவீ (ரஹ்) அவர்களின் 'தர்பியதுஸ்ஸாலிக்' என்ற நூலைப் பார்த்துவரலாம். அதுவும் கிடைக்காவிட்டால் அதன் சாரமான பஸாயிரே ஹகீமுல் உம்மத், மஆதிரே ஹகீமுல் உம்மத் என்ற நூலைப் பார்த்து வரவும். இந்த நூல்களும் கிடைக்காவிட்டால் ஹஜ்ரத் தானவீ (ரஹ்) கூறும் கீழ்வரும் முறைப்படி நடந்துவரவும். இன்ஷா அல்லாஹ் அந்தரங்க சுகம் கிடைக்கும்.

1. அறிஞர்களிடம் கேட்டோ நம்பகமான நூல்களை படித்தோ மார்க்க அறிவை வளர்த்து வரவும்.
2. தொழுகை, நோன்புகளை நிறைவேற்றி வரவும்.
3. துற்குணங்கள் இருப்பதாகத் தெரிந்தால் உங்களுக்குத் தெரிந்தவரை சிகிச்சை செய்து வரவும்.
4. பெரிய பாவங்கள் செய்யாமல் இருந்து வரவும். செய்த பாவத்திற்கு இஸ்திஃபார் செய்து வரவும்.

யா அல்லாஹ் - உனது அருளால் என்னை சீராக்கு என துஆவும் செய்துவர வேண்டும். இப்படிச் செய்துவந்தால் இன்ஷா அல்லாஹ் வெற்றி கிடைக்கும்.

## சுன்னத்தான சில வஜீஃபாக்கள்.

1. இந்த ஸலவாத்தை ஓதி வருபவருக்கு எனது பரிந்துரை அவசியம் என நபி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அருளினார்கள்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّ عَلٰى اٰلِ مُحَمَّدٍ وَّ اَنْزِلْهُ

الْمَقْعَدَ الْمُقَرَّبَ عِنْدَكَ

2. சதகா கொடுக்க வசதியில்லாதவர்கள் இந்த ஸலவாத்தை ஓதி வந்தால் பயன் ஏற்படும் என நபிகளார் அருளினார்கள்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ عَبْدِكَ وَ رَسُوْلِكَ وَ

صَلِّ عَلَى الْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنَاتِ وَالْمُسْلِمِيْنَ

وَالْمُسْلِمَاتِ

3. இந்த துஆவை காலையும், மாலையும் மூன்று முறை ஓதி வந்தால் அனைத்து பலா முஸீபத்துகளிலிருந்தும் பாது காப்புக் கிடைக்கும் என நபிகளார் நவின்றார்கள்.

بِسْمِ اللّٰهِ الَّذِي لَا يَضُرُّ مَعَ اسْمِهٖ شَيْءٌ فِي الْاَرْضِ وَلَا فِي السَّمَاءِ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ اَعُوْذُ بِكَلِمَاتِ اللّٰهِ التَّامَّاتِ كُلِّهَا مِنْ شَرِّ مَا خَلَقَ

4. உள்ளத் தூய்மையுடன் ஒரு தடவை இந்த சய்யிதுல் இஸ்திங்ஃபாரை ஓதினால் சொர்க்கம் கிடைக்கும் என நபிகளார் அருளினார்கள்.

اَللّٰهُمَّ اَنْتَ رَبِّي لَا اِلٰهَ اِلَّا اَنْتَ خَلَقْتَنِي وَ اَنَا عَبْدُكَ وَ اَنَا عَلٰى عَهْدِكَ وَ وَعْدِكَ مَا اسْتَطَعْتُ اَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ اَبُوْءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَ اَبُوْءُ بِذَنْبِي فَاغْفِرْ لِي فَاِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوْبَ اِلَّا اَنْتَ

5. ஏதேனும் பயம் சிந்தனை ஏற்பட்டால் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இதை ஓதுவார்கள்.

يَا حَيُّ يَا قَيُّوْمُ بِرَحْمَتِكَ اَسْتَغِيْثُ

6. ஏதேனும் பிரச்சனை - அபாயம் - பயம் - துன்பம் - கவலை - நோய் - குழப்பம் - பொருளாதார நெருக்கடி ஏற்பட்டால் பெரியார்களால் இந்த ஆயத்தை ஓதுவார்கள்.

ஓதும் முறை :

ஸலவாத் 11 தடவை

لَآ اِلٰهَ اِلَّآ اَنْتَ سُبْحَانَكَ اِنِّيْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ

111 தடவை

மீண்டும் ஸலவாத் 11 தடவை ஓதிவிட்டு துஆ செய்ய வேண்டும். இன்ஷா அல்லாஹ் ஈடேற்றம் கிடைக்கும்.

7. யாரேனும் தொல்லை கொடுத்தால் - தீர்க்க முடியாத எந்த பிரச்சனையாக இருந்தாலும் இதை அதிகமாக ஓதி வரலாம். குறிப்பாக ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் 7 தடவை ஓதி வரலாம் - நிம்மதி கிடைக்கும்.

يَا اَللّٰهُ يَا رَحْمٰنُ يَا رَحِيْمُ يَا ذَا الْجَلَالِ

وَالْاِكْرَامِ يَا حَيُّ يَا قَيُّوْمُ بِرَحْمَتِكَ اَسْتَغِيْثُ

8. எந்த முக்கிய வேலை செய்வதற்கு முன்பும் பெண் பேசுவது, பயணம் போன்ற எந்தச் செயலாக இருந்தாலும் சரியே இரண்டு ரக்அத் தொழுதுவிட்டு துஆ செய்ய வேண்டும்.

அல்லாஹ்விடம் நலவை தேடி இஸ்திகாரா தொழாமலிருப்பது பெரும் நஷ்டமாகும் என நபிகளார் அருளியுள்ளார்கள்.

## இஸ்திகாரா தொழுத பின் ஓதும் துஆ :

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْتَخِيْرُكَ بِعِلْمِكَ وَ اَسْتَقْدِرُكَ

بِقُدْرَتِكَ وَ اَسْئَلُكَ مِنْ فَضْلِكَ الْعَظِيْمِ وَ اِنَّكَ

تَقْدِرُ وَلاَ اَقْدِرُ وَ تَعْلَمُ وَ لاَ اَعْلَمُ وَ اَنْتَ عَلاَّمُ

الْغُيُوْبِ اَللّٰهُمَّ اِنْ كُنْتَ تَعْلَمُ اَنَّ هٰذَا الْاَمْرَ خَيْرٌ

لِّيْ فِيْ دِيْنِيْ وَ مَعَاشِيْ وَ عَاقِبَةِ اَمْرِيْ فَاقْدِرْهُ لِيْ وَ

يَسِّرْهُ لِيْ ثُمَّ بَارِكْ لِيْ فِيْهِ وَ اِنْ كُنْتَ تَعْلَمُ اَنَّ

هٰذَا الْاَمْرَ شَرٌّ لِّيْ فِيْ دِيْنِيْ وَ مَعَاشِيْ وَ عَاقِبَةِ اَمْرِيْ

فَاصْرِفْهُ عَنِّيْ وَ اقْدِرْ لِيَ الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ

اَرْضِنِيْ بِهٖ

اَرْضِيْ بِهٖ

اَنَّ هٰذَا الْاَمْرَ என்று ஓதும்போது நாம் நாடும் செயலை நினைத்துக் கொள்ள வேண்டும்.

இரவு இத்தொழுகையை தொழுதுவிட்டு துஆச் செய்து சுத்தமான விரிப்பில் கிப்லா பக்கம் முகத்தை ஆக்கி வுலுவுடன் தூங்க வேண்டும். காலை எழுந்ததும் உள்ளத்தில் நாடிய செயலைச் செய்யலாம் என உறுதியாக எண்ணம் வந்தால் அதைச் செய்வதே சிறந்தது.

## சுன்னத்தான துஆக்கள்

மிஸ்வாக், அத்தர், சுர்மா உபயோகிப்பது, சீவுவது பெருமானாரின் நிரந்தரப் பழக்கமாகும்.

1. தூங்கி எழுந்த உடன் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَحْيَانَا بَعْدَ مَا اَمَاتَنَا وَاِلَيْهِ

النُّشُوْرُ *

2. கழிப்பறைக்குச் செல்லும் முன் ஓதும் துஆ

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ

وَالْخَبَائِثِ

3. கழிப்பறையிலிருந்து வெளியே வந்து ஓதும் துஆ.

غُفْرَانَكَ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَذْهَبَ عَنِّي الْاَذٰى وَ

عَافَانِيْ

4. உலுச் செய்வதற்கு முன்

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

5. உலுவின் இடையே

اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ ذَنْبِيْ وَ وَسِّعْ لِيْ فِيْ دَارِيْ وَ

بَارِكْ لِيْ فِيْ رِزْقِيْ

6. உளு செய்த பிறகு

اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلاَّ اللّٰهُ وَحْدَهٗ لاَ شَرِيْكَ لَهٗ وَ اَشْهَدُ

اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ وَ رَسُوْلُهٗ اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنَ

التَّوَّابِيْنَ وَاجْعَلْنِيْ مِنَ الْمُتَطَهِّرِيْنَ وَاجْعَلْنِيْ مِنْ

عِبَادِكَ الصَّالِحِيْنَ سُبْحَانَكَ اللّٰهُمَّ وَ بِحَمْدِكَ

اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلاَّ اَنْتَ اَسْتَغْفِرُكَ وَ اَتُوْبُ

اِلَيْكَ *

7. பள்ளிவாசலில் நுழையும் போது

اَللّٰهُمَّ افْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ

8. பள்ளிவாசலிலிருந்து வெளியே வரும் போது

اَللّٰهُمَ اِنِّيْ اَسْأَلُكَ مِنْ فَضْلِكَ

9. பாங்கு முடிந்த பின்

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلٰوةِ الْقَائِمَةِ

اٰتِ سَيِّدَنَا مُحَمَّدَنِ الْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ وَالدَّرَجَةَ

الرَّفِيْعَةَ وَابْعَثْهُ مَقَامًا مَحْمُوْدَنِ الَّذِيْ وَعَدْتَّهٗ

وَارْزُقْنَا شَفَاعَتَهُ يَوْمَ الْقِيَامَةِ اِنَّكَ لاَ تُخْلِفُ

الْمِيْعَادَ

10. சாப்பிடுவதற்கு முன்

بِسْمِ اللّٰهِ وَعَلٰى بَرَكَةِ اللّٰهِ

11. சாப்பிட்ட பின்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَنَا وَ سَقَانَا وَ جَعَلَنَا مِنَ

الْمُسْلِمِيْنَ

12. ஆடை அணியும் போது

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ كَسَانِيْ مَا اُوَارِيْ بِهٖ عَوْرَتِيْ

وَ اَتَجَمَّلُ بِهٖ فِيْ حَيَاتِيْ

13. வீட்டிலிருந்து வெளியாகும் போது

بِسْمِ اللّٰهِ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ

14. வீட்டில் நுழையும் போது

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ خَيْرَ الْمَوْلِجِ وَ خَيْرَ الْمَخْرَجِ

بِسْمِ اللّٰهِ وَلَجْنَا وَ عَلَى اللّٰهِ رَبِّنَا تَوَكَّلْنَا*

15. தூங்குவதற்கு முன்

بِاسْمِكَ رَبِّي وَضَعْتُ جَنْبِي وَبِكَ أَرْفَعُهُ إِنْ أَمْسَكْتَ نَفْسِي فَارْحَمْهَا وَ إِنْ أَرْسَلْتَهَا فَاحْفَظْهَا بِمَا تَحْفَظُ عِبَادَكَ الصَّالِحِيْنَ

اَللّٰهُمَّ قِنِيْ عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ

16. நோயாளியைச் சந்திக்கச் சென்றால்

اَللّٰهُمَّ اشْفِهِ اَللّٰهُمَّ عَافِهِ اَسْأَلُكَ اللهَ الْعَظِيْمَ رَبَّ الْعَرْشِ الْعَظِيْمِ اَنْ يَّشْفِيَكَ

17. வாகனத்தில் அமர்ந்ததும்

بِسْمِ اللهِ اَلْحَمْدُ لِلّٰهِ سُبْحَانَ الَّذِيْ سَخَّرَ لَنَا هٰذَا وَمَا كُنَّا لَهٗ مُقْرِنِيْنَ وَاِنَّا اِلٰى رَبِّنَا لَمُنْقَلِبُوْنَ

18. விரும்பியது நடந்தால்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ بِنِعْمَتِهٖ تَتِمُّ الصَّالِحَاتُ

19. பிடிக்காத செயல் நடந்தால்

اَلْحَمْدُ لِلّٰهِ عَلٰى كُلِّ حَالٍ

20. வஸ்வஸா ஏற்பட்டால்

أَعُوْذُ بِاللهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ آمَنْتُ بِاللهِ وَ رُسُلِهِ

21. கண் திருஷ்டி ஏற்பட்டவர் மீது ஓதி ஊதும் துஆ

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ اَذْهِبْ حَرَّهَا وَ بَرْدَهَا وَ وَصَبَهَا

**அனைத்தையும் உள்ளடக்கிய துஆ**

இந்த துஆ கேட்டால் எல்லா துஆவையும் கேட்டது போன்றதாகும். எனவே ஒவ்வொரு தொழுகைக்குப் பிறகும் ஒரு தடவை ஓதி வருவது நல்லது.

اَللّٰهُمَّ اِنَّا نَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ وَنَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا اسْتَعَاذَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللهُ عَلَيْهِ وَ سَلَّمَ

**ஷிஜ்ரா**

ஏந்த ஷைகு - குருவிடமாவது பைஅத் பெற்றிருந்தால் அந்த குருவின் பரம்பரைத் தொடரான ஷிஜ்ராவை ஓதி வருவது பரகத் ஆகும். இதனால் அப்பெரியார்களுடன் ஒரு விஷேச அன்பின் தொடர்பு ஏற்படுகிறது. ஷிஜ்ரா ஓதி வருவது எல்லா பெரியார்களின் வழியிலும் உள்ளது. நம்முடைய ஷிஜ்ராவும் உள்ளது. இதை தினம் பஜ்ருக்கு பிறகு ஓதி வருவது

நல்லது. தினம் முடியாவிட்டால் வாரம் ஒரு முறையாவது ஓதி வரலாம். ஷிஜ்ரா ஓதிவிட்டு குறைந்தது மூன்று தடவை குல்ஹுவல்லாஹு சூறா ஓதி அப்பெரியார்களின் பரிசுத்த ஆன்மாக்களுக்கு எத்தி வைக்க வேண்டும். இதனால் நிஸ்பத் பலம்பெறும்.

இதே போல் தனது பெரியார்களுக்கு, உறவினர்களுக்கு ஈஸால் சவாப் செய்து அவர்களுக்கு துஆ செய்துவர வேண்டும்.

**ஷிஜ்ரா வருமாறு :**

யா அல்லாஹ் உனது அருளால் நபி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பொருட்டால் வலிமார்கள், நல்லடியார்களின் பொருட்டால் மௌலானா அஷ்ரஃப் அலீதானவீ (ரஹ்) அவர்கள் மற்றும் சங்கைமிகு குருமார்களாகிய ஹஜ்ரத் ஹாஜி இம்தாதுல்லாஹ் (ரஹ்) ஹஜ்ரத் நூர் முஹம்மது (ரஹ்), ஹஜ்ரத் ஹாஜி அப்துர் ரஹீம் (ரஹ்), ஹஜ்ரத் அப்துல் பாரீ (ரஹ்), ஹஜ்ரத் அப்துல் ஹாதீ (ரஹ்), ஹஜ்ரத் அழ்துத்தீன் (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் முஹம்மது (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் முஹம்மது (ரஹ்), ஹஜ்ரத் முஹம்மது ஷாஹ் (ரஹ்), ஹஜ்ரத் முஹிப்புல்லாஹ் (ரஹ்), ஹஜ்ரத் அபூ ஸஈத் (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் நிஜாமுத்தீன் (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் ஜலாலுத்தீன் (ரஹ்), ஹஜ்ரத் அப்துல் குத்தூஸ் (ரஹ்), ஹஜ்ரத் ஷைகு முஹம்மது (ரஹ்), ஹஜ்ரத் ஷைகு அஹ்மது (ரஹ்), ஹஜ்ரத் அப்துல் ஹக் (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் ஜலாலுத்தீன் (ரஹ்), ஹஜ்ரத் ஷம்சுத்தீன் (ரஹ்), ஹஜ்ரத் சாபிரீ (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் பரீதுத்தீன் (ரஹ்), ஹஜ்ரத் குதுபுத்தீன் (ரஹ்), ஹஜ்ரத் காஜா முஈனுத்தீன் சிஷ்தீ (ரஹ்), ஹஜ்ரத் உஸ்மான் (ரஹ்), ஹஜ்ரத் ஷரீப் ஜன்தனீ (ரஹ்), ஹஜ்ரத் மவ்தூத் (ரஹ்), ஹஜ்ரத் அபூ யூசுஃப் (ரஹ்), ஹஜ்ரத் அபூ முஹம்மது (ரஹ்), ஹஜ்ரத் அஹ்மது (ரஹ்), ஹஜ்ரத் அபூ இஸ்ஹாக் (ரஹ்), ஹஜ்ரத் மம்ஷாத் (ரஹ்), ஹஜ்ரத் அபூ ஹுபைரா (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் குதைபா (ரஹ்), ஹஜ்ரத் இப்னு அத்ஹம் (ரஹ்), ஹஜ்ரத் ஷாஹ் புழைல் (ரஹ்), ஹஜ்ரத் அப்துல் வாஹித் (ரஹ்), ஹஜ்ரத் ஹஸன் பஸரீ ரஹ்மதுல்லாஹி அலைஹி ஆகியோர் பொருட்டால் மேலும் ஹஜ்ரத் அலீ (ரலி)

அவர்களின் பொருட்டால் ரப்புல் ஆலமீனே! ஈருலகிலும் நலவுகளை அருள்வாயாக. ஆமீன்.

## நல்ல முடிவு

இறுதி முடிவு நல்லதாக அமைவதை - ஈமானுடன் உயிர் பிரிவதை எல்லா நிஃமத்களைவிடவும் மிக உயர்ந்த - உன்னத நிஃமதாக கருத வேண்டும். அதற்காக எல்லா நேரமும் குறிப் பாக ஐந்து நேர தொழுகைக்குப் பிறகும் மிக பணிவாக உள்ளச் சத்துடன் அல்லாஹ்விடம் மனமுருகி கெஞ்சி துஆ செய்து வர வேண்டும். ஈமானைத் தந்தமைக்கு அல்லாஹ்விற்கு நன்றி செலுத்திவர வேண்டும். இதனாலும் முடிவு நன்றாக அமையும். "நீங்கள் நன்றி செலுத்தினால் நிச்சயம் உங்களுக்கு அதிகப் படுத் தித்தருவேன்" என அல்லாஹ் அருளியுள்ளான். யா அல்லாஹ் இந்த உயர்ந்த நிஃமத்தை எங்களுக்கு வழங்குவாயாக!

اَللّٰهُمَّ لَقِّنِّي حُجَّةَ الْإِيْمَانِ عِنْدَ الْمَمَاتِ

யா அல்லாஹ்! மரணத்தருவாயில் எனக்கு ஈமானுடைய ஆதாரத்தைக் கற்றுக் கொடு.

யா அல்லாஹ் எனது ஈமானை பரிபூரணப்படுத்து வாயாக, பலப்படுத்துவாயாக! நல்ல செயல் செய்யவும், சுன்னத்தைப் பின்பற்றவும் தவ்ஃபீக் செய்வாயாக!

இதிலேயே நிலைத்திருந்து ஈமானுடன் நல்ல முடிவு ஏற்பட உதவிசெய்வாயாக! ஆமீன்.

يَا رَبَّ الْعَالَمِيْنَ بِحُرْمَةِ سَيِّدِ الْمُرْسَلِيْنَ وَ رَحْمَةٌ لِّلْعَالَمِيْنَ شَفِيْعِ الْمُذْنِبِيْنَ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ تَسْلِيْمًا كَثِيْرًا كَثِيْرًا

رَبَّنَا لَا تُزِغْ قُلُوبَنَا بَعْدَ إِذْ هَدَيْتَنَا وَهَبْ لَنَا مِن لَّدُنْكَ رَحْمَةً إِنَّكَ أَنْتَ الْوَهَّابُ * رَبَّنَا تَقَبَّلْ مِنَّا إِنَّكَ أَنْتَ السَّمِيعُ الْعَلِيمُ * وَصَلَّى اللهُ عَلَى سَيِّدِنَا وَ مَوْلَانَا مُحَمَّدٍ وَآلِهِ وَ أَصْحَابِهِ وَسَلَّمَ كَثِيرًا كَثِيرًا

## ஆன்மீகத்தின் சாரம்

ஹகீமுல் அஷ்ரஃப் அலீ தானவீ (ரஹ்) அருளினார்கள்: ஆன்மீகம் என்றால் ஏவல்களைச் செய்ய சோர்வாக இருந்தால் அதை எதிர்த்து அந்த ஏவல்களை துணிந்து செய்வதற்கும் பாவங்களை செய்ய தேட்டமாக இருந்தால் அதை அடக்கி பாவங்கள் செய்யாமல் இருப்பதற்கும் சொல்லப்படும். இந்த பக்குவத்தை உருவாக்கவே ஆன்மீகத்தில் பல பயிற்சிகள் செய்யப்படுகிறது. இந்த மனப்பக்குவம் கிடைத்துவிட்டால் பிறகு எந்த பயிற்சிகளும் அவசியமில்லை. நன்மைகளைச் செய்வதும் பாவங்களை செய்யாமல் இருப்பதும் உருவாகிவிட்டால் இறை தொடர்பு கிடைக்கிறது. தொடர்ந்து ஏவல்களை எடுத்து நடந்தும் விலக்கல்களை விட்டும் தவிர்த்தும் இருந்து வரவர அது இறை தொடர்பை பாதுகாக்கும். நாளுக்குநாள் இறை தொடர்பை அதிகப்படுத்திக் கொண்டே செல்லும்.

# குர்ஆன் ஓதுங்கள்!

வழங்குபவர் :

**ஹகீமுல் உம்மத் மௌலானா அஷ்ரப் அலீ தானவீ (ரஹ்)**

குர்ஆன் ஷரீபை ஒழு இல்லாமல் தொடக்கூடாது. குர்ஆன் ஷரீப் ஓத முடியாத அளவிற்கு பழமையானதாகி விட்டால் ஒரு குழி தோண்டி மைய்யத்தை வைத்து அடக்குவது போல ஒரு சுத்தமான துணியில் சுற்றி குழிக்குள் வைத்து அதற்குமேல் பலகை வைத்து மண்ணைப் போட வேண்டும்.

குர்ஆன் ஷரீபை சுத்தமாக ஓத முயற்சி செய்ய வேண்டும். குர்ஆன் ஓதுவதில் மூன்று படித்தரம் உண்டு. 1. வெறும் வார்த்தையை சுத்தமாக உச்சரிப்பது. 2. அர்த்தத்தைப் புரிந்து ஓதுவது. 3. கருத்தைப் புரிந்து அமல் செய்வது.

குர்ஆனின் ஆயத்துகளில் ஏதேனும் ஐயம் ஏற்பட்டால் அதை நாமாக நீக்க முயலக் கூடாது. ஏனெனில் பெரியார் களிடம் செல்வதால், அவர்களின் பேச்சைக் கேட்பதால் அல்லாஹ்வின் மீது பிரியம் ஏற்படுகிறது. அதனால் சந்தேகங்கள் நீங்கி விடுகிறது.

ஆயத்துகளை எழுதாமல் வெறும் தர்ஜுமாவை மட்டும் எழுதுவது கூடாது. யூத, கிறிஸ்தவர்களின் பழக்கத்தைப் போன்று இது இருக்கிறது. தர்ஜமதுல் குர்ஆனை ஒளு இல்லா மல் தொடக் கூடாது.

சில விஷயங்கள் குர்ஆனில் திரும்பத் திரும்ப வருகிறது. இதற்குக் காரணம் நாம் அதைப் புரிந்து செயல்பட வேண்டும் என்ற பாசத்தில் ஒரு தந்தை தன் மகனுக்கு ஒரு விஷயத்தை அடிக்கடி கூறி உணர்த்துவது போல அல்லாஹ் உணர்த்தியிருக் கிறான். அல்லாஹு தஆலா பெற்றோரைவிட நம்மின் மீது பாசம் உள்ளவனாக உள்ளான்.

குர்ஆன் ஷரீப் ஓர் ஆன்மீக நூலாகும். அதில் மார்க்க சம்பந்தப்பட்ட கருத்துக்கள் இருக்கின்றன. எல்லா கல்வி

களும் கலைகளும் குர்ஆனில் உண்டு என்பது தவறான கருத் தாகும். ஒரு விஞ்ஞான கருத்தை நாம் சுற்றி வளைத்து குர்ஆனில் இருக்கிறது என்று நிரூபிப்பது கூடாது. ஏனென்றால் வருங்காலத்தில் அந்த கருத்து தவறு என்றாகிவிட்டால் குர்ஆனில் உள்ள அந்த வசனத்தை தவறு என்று சொல்வது வரும்.

குர்ஆன் ஷரீப் ஓதுவதால் நிறைய பயன்கள் உள்ளன. அர்த்தம் புரியாமல் ஓதினால் என்ன பயன் என்று சிலர் கேட் கிறார்கள். இது தவறாகும். ஏனென்றால் அர்த்தம் புரிந்து ஓதி னாலும், புரியாமல் ஓதினாலும் பயன் ஏற்படவே செய்கிறது. குர்ஆனின் அர்த்தம் தெரிய விருப்பப்பட்டால் முறையாக உஸ்தாதிடம் படிக்க வேண்டும். தானாக தர்ஜமதுல் குர்ஆனை படித்தால் தவறாக புரிந்துகொள்ளும் அபாயம் இருக்கிறது.

தானாக படிக்க விரும்பினால் புரியாத இடங்களை குறித்து வைத்து பிறகு ஆலிம்களிடம் கேட்டுத் தெளிவுபெற வேண்டும்.

குர்ஆன் ஓத ஓத அல்லாஹ்வின் மீது அன்பு ஏற்படுகிறது. யார் யார் இடமோ அமர்ந்து மணிக்கணக்கில் பேசுகிறோம். ஆனால் அல்லாஹ்விடம் அரை மணி நேரம் கூட பேசுவ தில்லை. குர்ஆன் ஓதும்போது நாம் அல்லாஹ்விடம் பேசுவது போன்று உணர்வு ஏற்படும்; அல்லது அல்லாஹ்வே நம்மின் மூலம் நம்மிடம் பேசுவதுபோல் உணர்வு ஏற்படும். எனவே தான் ஞானிகள் - ஆரிஃபீன்களுக்கு குர்ஆன் ஓதும்போது பல நிலைகள் ஏற்படுகிறது. ஏனென்றால் அல்லாஹ் குர்ஆனில் தன்னுடைய சக்தி, கம்பீரம், கண்ணியத்தை வெளிப்படுத்து கிறான். சில இடங்களில் கண்டிக்கிறான். சில இடங்களில் ஆறுதல் கூறுகிறான். சில இடங்களில் சுபச் செய்தி. சில இடங்களில் நான் என்கிறான். சில இடங்களில் நீ என்கிறான்.

நமக்கு இயல்பிலேயே அல்லாஹ் ரசூலின் மீது அன்பு எல்லாத்தைவிட அதிகமாக இருக்கிறது. ஒரு காதலி, காதலனுக்கு புரியாத பாஷையில் லெட்டர் எழுதியிருந்தால் அது புரியா விட்டாலும் அதை மதிப்பான், பாதுகாப்பான்,

படித்துப் பார்ப் பான், இதுபோல் குர்ஆனை அர்த்தம் தெரியாமல் ஓதும் போதும் இறையன்பர்களுக்கு மகிழ்ச்சி ஏற்படும். எனவேதான் ஒரு நல்ல காரீ குர்ஆன் ஓதும்போது இன்பமாக கேட்கிறோம். அர்த்தம் புரியாதவர்களும் இன்பம் பெறுகின்றனர். ஆக நாம் ஆஷிக் அல்லாஹ் மஃஷூஉக், ஓர் ஆசிக் - மஃஷூஉகிடம் அடிக்கடி பேச வேண்டும் என்பதற்காக தந்திரங்களை செய்து சந்தர்ப் பங்களை ஏற்படுத்திக் கொள்கிறான். இதுபோல் நாம் அல்லாஹ் விடம் பேச வேண்டும். அல்லாஹ்வின் மீது அன்பு ஏற்பட்டு விட்டால் எல்லாம் சரியாகிவிடும். அல்லாஹ்விடம் அன்பு ஏற் பட எளிய வழி பெரியார்களின் சகவாசத்தில் இருக்க வேண்டும். அல்லாஹ் இந்த சகவாசத்தில் அவன்மீது அன்பை ஏற்படுத்தும் சக்தியை வைத்துள்ளான்.

நபி மூஸா (அலை) அவர்களிடம் அல்லாஹ் உமது வலக் கரத்தில் என்ன உள்ளது? என கேட்டான். இந்த சந்தர்ப் பத்தைப் பயன்படுத்தி அல்லாஹ்விடம் அதிகமாக பேச வேண்டும் என்று விரும்பிய மூஸா நபியவர்கள் நீண்ட பதிலைக் கூறினார்கள் என்று அறிகிறோம்.

உண்மையில் நமக்கு அல்லாஹ்வின்மீது அன்பு இருக்கு மானால் அவன் பெயரைச் சொன்னாலே இன்பமாக இருக்கும். மதுப் பிரியர்களுக்கு 'மது'வின் பெயரைக் கேட்டாலே போதை வருவதுபோல் இன்பமடைகிறார்கள்.

கைசேதம்! முஸ்லிம்களுக்கு அல்லாஹ்வின் மீது பூரண அன்பு இருந்தால் குர்ஆன் ஓதுவதில் இன்பம் காணுவார்கள். ஏனென்றால் குர்ஆனை விட வேறு எந்த நூலில் அல்லாஹ்வின் திருநாமம் அதிகம் இடம் பெற்றுள்ளன? கிட்டத்தட்ட ஒவ் வொரு ஆயத்திலும் அவன் பெயர் இல்லாமல் இல்லை. ஆங் காங்கே அவனுடைய புகழ் வருகிறது. இப்படி யாரும் இறை வனைப் புகழ்ந்துவிட முடியாது.

பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களுக்கு குர்ஆன் வார்த்தைகளிலே காதல் இருந்து. ஒரு

தடவை அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் என்ற சஹாபியிடம் குர்ஆனை ஓதுங்கள் என்றார்கள். ஏன்? பிறரின் வாயிலிருந்து கேட்கும்போது மன ஓர்மை ஏற்படுகிறது. அதனால் இன்பம் அதிகமாகிறது. குர்ஆன் ஓதும்போது அல்லாஹ் அதைக் கேட்கிறான். நம் பக்கம் அதிகம் தவஜ்ஜுஹ் அதிகம் கவனம் செலுத்து கிறான் என நபிகளார் கூறினார்கள். இதைவிட வேறு என்ன வேண்டும். இது ஒரு பெரும் செல்வமல்லவா அதைப் பாதுகாத்து வர வேண்டும்.

நான் பாடுவதை காதலி கேட்கிறாள் என அறிந்தால் எந்த காதலன்தான் இன்பமடைய மாட்டான்? நன்றாக பாட முயல மாட்டான்?

அல்லாஹ் நம்மின் மீது எவ்வளவு அன்பு வைத்துள்ளான் என பாருங்கள். அவனே குர்ஆனையும் கொடுத்து அதை ஓதினால் நான் மகிழ்ச்சியடைகிறேன், உங்களுக்கு நன்மை கொடுக்கிறேன் என்று சொல்கிறான்.

இப்படி இருந்தும் நாம் குர்ஆன் ஓதுவதில் எவ்வளவு அசட்டையாக இருக்கிறோம். அல்லாஹ் நம்மை மன்னிப்பானாக.

அர்த்தம் தெரியாமல் ஓதினால் என்ன பலன்? என கேட்டுக் கொண்டு சிலர் குர்ஆனை ஓதுவதில்லை. சரி அர்த்தத்தை தெரிய முயற்சிக்கிறார்களா என்றால் அதுவும் இல்லை. இதைவிட வேறு கைசேதம் என்ன இருக்க முடியும்? ஓதுவது கேட்பதில் வார்த்தைதான் பிரதானம்; அர்த்தமல்ல என்பதை புரிய வேண்டும்.

குர்ஆன் ஓதும்போது அல்லாஹ் என் 'கிராஅத்'ஐ கேட்கிறான் என்ற எண்ணத்தில் ஓதினால் ஓதுவதில் கவனம் ஏற்படும்.

'அர்த்தம்' முக்கியம் என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் எல்லா நேரத்திலும் அர்த்தம்தான் முக்கியம் என்று சொல்வதை என்னால் ஏற்க முடியாது. ஏனென்றால் ஒரு

நேரம் வெறும் வார்த்தையை மட்டும் கவனத்தில் கொண்டு தான் ஓத வேண்டும். அர்த்தத்தை கவனிக்கக்கூடாது. சாப்பிடு வதன் நோக்கம் உடலுக்கு சக்தி வருவதாகும். இருப்பினும் சுவையாக இருக்க வேண்டும் என்றும் பார்த்தாலே உண்ணத் தூண்டும் விதத்தில் தோற்றத்தில் ஆகியிருக்க வேண்டும் என்றும் கருதுகிறோம். இதே போன்றுதான் ஓதும்போது அர்த்தத்தைக் கவனிக்காமல் வார்த்தையை மட்டும் கவனித்து ஓதுவதில் தான் இன்பம் ஏற்படுகிறது.

நான் ஓதவில்லை; அல்லாஹ் என் மூலம் ஓதுகிறான் என்றும் அல்லது நான் ஓதுவதை அல்லாஹ் கேட்கிறான் என்றும் முராக்கபா சிந்திப்பது அர்த்தத்தை கவனிக்காமல் இருக்கும் போதுதான் ஏற்படும்.

கடலில் படகில் கப்பலில் செல்லும்போது ஏற்படும் இன்பம் கடல் உள்ளே செல்வதில் ஏற்படுவதில்லை. இதை வைத்து யாரும் கடலுக்கு மேல் உல்லாசமாக செல்வது வீணா னது என்று சொல்வார்களா? மருத்துவர்கள் கடலில் பயணிப் பது மகிழ்ச்சியைத் தரும்; உள்ளம், மூளைக்கு சந்தோசம் ஏற்படும். பார்வைக்கு குளுமை, பிரகாசம் அதிகமாகும் என்று கூறுகிறார்கள். ஆஸ்துமா போன்ற நுரையீரல் சம்பந்தப்பட்ட சில நோய்களுக்கு கடலில் பயணம் செய்வதால் மகிழ்ச்சி ஏற்பட்டு, உடல் இயல்பில் சக்தி உருவாகிறது. அதனால் அந்த நோய் நீங்கி விடுகிறது என்றும் கூறுகிறார்கள்.

எனவே அர்த்தத்தை கவனிக்காமல் வார்த்தையை மட்டும் ஓதி (குர்ஆனில் பயணமாவது) மிகவும் பயனுள்ள தாகும். எல்லா வணக்கங்களின் நோக்கமே இறை நெருக்கம் தான். அந்த வகையில் பார்க்கும்போது அல்லாஹ்விடமிருந்து முதலில் வந்தது வெறும் வார்த்தைகள்தான், அர்த்தம் பிறகு தான் வந்தது. எனவே வார்த்தைக்கு இறை நெருக்கம் அதிகம்.

அர்த்தமே இல்லாமல் குர்ஆனின் வார்த்தைகள் இருந் திருந்தாலும் ஆஷிக் - இறை நேசனுக்கு போதும். ஏனென்றால் மஃஷூக் ஏதேனும் பொருளை ஆஷிக்கிற்கு கொடுத்தால் இரு

இன்பம் ஏற்படுகிறது. ஒன்று மஹ்பூபின் திருக்கரத்தால் கிடைத்தது என்று எண்ணி, இரண்டு அந்த பொருளை சாப்பிடும்போது மஹ்பூபின் கையிலிருந்து கிடைத்தது என்று எண்ணினாலே போதும், ஆஷிக் ஆனந்தக் கூத்தாடுவான். சிலசமயம் மஹ்பூப் தந்த பொருளை ஆஷிக் நினைவுச் சின்னமாக பரகத்தாக கருதி பாதுகாக்கிறான். ஒருமுறை நபிகளார் ஒரு சஹாபிக்கு 'ஒரு கீறாத்' அளவு காசு கொடுத்தார்கள். அதை அவர் செலவு செய்யாமல் பாதுகாத்து வந்தார்.

இறுதியாகக் கூறுவதானால் இப்படிக் கூறலாம். சில விஷயத்தை கவனித்து பார்க்கையில் வார்த்தையை மட்டும், கவனிப்பதில் சிறப்பு அதிகம் இருக்கிறது. இன்னும் சில அர்த்தத்தை கவனிப்பதில் சிறப்பு அதிகம். ஆக வார்த்தையும் முக்கியம்; அர்த்தமும் முக்கியம். இரண்டையும் கவனிப்பதால் ஆர்வம் அதிகமாகிறது.

முகத்தஆத் என்று சொல்லப்படும் அலிப் - லாம் மீம் போன்ற பொருள் இல்லாத எழுத்துக்களினால் பயன் என்ன என்பதை கூறி முடிக்கிறேன். இந்த எழுத்துக்களின் தத்துவம் இதன் அர்த்தம் அல்லாஹ் ரசூலுக்கு தெரியும் - இதை நமக்கு சொல்லாததற்கு காரணம் - இது மலக்குகள், நபிகளாருக்கு சம்பந்தப்பட்டதாகும். ஒரு துறையின் இரகசியத்தை இன்னொரு துறையினர்களுக்கு தெரிவிப்பது நல்லதல்ல; தீங்கு ஏற்படும். ரகசிய போலீசின் நடைமுறை வார்த்தைகளை பிறருக்கு தெரிவிப்பது அபாயமானதாகும்.

மேலும் இந்த முகத்தஆத் எழுத்துகளால் அர்த்தம் மட்டும் முக்கியமல்ல; வார்த்தையும் முக்கியம் என்பதை உணர்த்தப்பட்டுள்ளது. கஷ்ஃபின் மூலம் இவைகளில் சிலர் முன்னறிவிப்புகள் உள்ளன என கூறியுள்ளார்கள்.

அல்லாஹ்தான் மிக்க அறிந்தவன்
நூல் : மஆரிஃபெ ஹகீமுல் உம்மத்.

33

## நற்பாக்கியசாலியின் வழித்துணை

# ஸலவாத்தின் சிறப்புகள்

உருது மூலம் :

ஹகீமுல் உம்மத் அல்லாமா அஷ்ரஃப் அலீ தானவீ (ரஹ்)

தமிழில் :

மௌலவீ அ. முஹம்மது வலிய்யுல்லாஹ் யூசுஃபீ

# மூல நூலின் துவக்க உரை

எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே!

ஸலவாத் நபி பெருமானாருக்கே!

அடியேன் 'கீரானா' என்ற ஊருக்கு சென்றிருந்த சமயம் நற்குணத்தின் நாயகர், ஹாபிழ் ஸயீத் அஹ்மத் என்பவர்களை சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அப்பொழுது அவர்கள் என்னிடம் ஸலவாத்தின் சிறப்புகள் பற்றி ஓர் நூல் எழுதினால் நன்றாக இருக்கும் என விருப்பம் தெரிவித்தார்கள். ஸலவாத் பற்றி நிறைய நூல்கள் உள்ளனவே என்று நான் கூறினேன். அதற்கு அவர்கள் ஒவ்வொரு எழுத்தாளருடைய நடையிலும் ஒரு தனி ருசி இருக்கிறதல்லவா? என்று கூறினார்கள். அதன்படி இறைவனின் பெயர் கூறி ஆரம்பித்து இந்த நூலை எழுதி முடித்தேன்.

ஸலவாத் சொல்வது நற்பாக்கியத்தை நாடும் அன்பர்களுக்கு மறுமையின் கட்டிச் சாதமாக உள்ளது என்ற கருத்தை கவனித்து இதை எழுத தூண்டியவரின் பெயரையும் கவனித்து زَادُ السَّعِيْد (ஜாதுஸ் ஸயீத்) நற்பாக்கியசாலியின் கட்டிச் சாதம் (வழித்துணை) என்று இதற்கு பெயர் வைத்தேன். அல்லாஹுதஆலா இதை ஏற்று எனக்கும் நற்பாக்கியத்திற்கு கட்டிச் சாதமாக ஆக்கியருள்வானாக. ஆமீன்.

(மௌலானா) அஷ்ரஃப் அலீ தானவீ (ரஹ்)
ஹிஜ்ரீ 1320.

## பிரிவு 1.

## ஸலவாத்தின் கட்டளை

1. அல்லாஹ் அருளுகிறான், ஈமான் கொண்ட விசுவாசிகளே! நபி பெருமானாரின் மீது ஸலவாத் - ஸலாம் ஓதுங்கள்! (அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் வஸல்லிம்)

2. நபிகளார் நவின்றார்கள், வெள்ளிக்கிழமை அதிகமதிகம் ஸலவாத் ஓதுங்கள் அது என்னிடம் சமர்ப்பிக்கப்படுகிறது.

3. ஸலவாத் ஓதுங்கள்! அது உங்களைப் பரிசுத்தப்படுத்தும்.

4. என் பெயர் கேட்டால் ஸலவாத் ஓதுங்கள்.

5. என்னை நினைப்பவர் என்மீது ஸலவாத் சொல்லட்டும்.

6. ஸலவாத் ஓதுங்கள் நீங்கள் எங்கிருந்தாலும் என்னிடம் அது வந்து சேருகிறது.

## பிரிவு 2.

## ஸலவாத்தை விடுவதன் தண்டனை!

1. நபிகளார் நவின்றார்கள், அல்லாஹ் உடைய திக்ரும் என் மீது ஸலவாத்தும் இல்லாத எந்த சபையும் மறுமையில் பயன்தராது.

2. என் பெயர் கேட்டு ஸலவாத் கூறாதவன் மிகப் பெரும் கஞ்சனாவான்.

3. என் பெயர் கேட்டு ஸலவாத் சொல்லாதவன் விளங்க மாட்டான்.

4. என் மீது ஸலவாத் கூறுவதை மறந்து விட்டவன் சொர்க்க வழியில் சிக்கிக் கொள்வான்.

## பிரிவு 3.

## ஸலவாத்தின் சிறப்புகள்

1. அல்லாஹ்வும் வானவர்களும் நபி பெருமானாரின் மீது ஸலவாத் சொல்கிறார்கள் என்று குர்ஆனில் வருகிறது.

2. ஜும்ஆ தினத்தில் என்மீது ஸலவாத் கூறினால் என்னிடம் எடுத்துக்காட்டப்படுகிறது.

3. ஸலவாத் சொல்பவர்களுக்கு பதில் சொல்ல எனது ரூஹை அல்லாஹ் எனக்குத் திருப்பிக் கொடுக்கிறான்.

4. அதிகமாக ஸலவாத் சொல்பவர் மறுமையின் எனக்குப் பக்கத்தில் இருப்பார்.

5. உலகில் எங்கு ஸலவாத் கூறினாலும் அதை என்னிடம் எடுத்து வர அல்லாஹ் வானவர்களை நியமித்துள்ளான்.

6. ஸலவாத் சொல்பவர்களுக்கு அல்லாஹ் ரஹ்மத் செய்வதாகவும், ஸலாம் கூறுபவர்களுக்கு சாந்தி வழங்குவதாகவும் என்னிடம் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் வந்து கூறிய போது நான் நன்றி தெரிவிக்கும் முகமாக அல்லாஹ்வுக்கு சஜ்தா செய்தேன்.

7. நான் எந்தளவுக்கு ஸலவாத் ஓதுவது? என உபை இப்னு கஅப் (ரலி) கேட்டபோது, மனம் விரும்பும் அளவு சொல் என பெருமானார் கூறினார்கள். எப்பொழுதும் ஸலவாத் ஓதுவதை வழமையாக நான் ஆக்கினால் என்ன? என அவர் கேட்டபோது அப்படி செய்! அது உமது கவலைகளை போக்கும், உமது பாவங்கள் மன்னிக்கப் படும் என பதிலளித்தார்கள்.

8. என் மீது ஒரு முறை ஸலவாத் சொன்னால் அல்லாஹ் 10 ரஹ்மத் செய்கிறான். 10 பாவம் மன்னிக்கப்படுகிறது. 10 நன்மை எழுதப்படுகிறது என்று பெருமானார் சொன்னார்கள்.

9. ஸலவாத் சொல்பவருக்கு அல்லாஹ் 70 ரஹ்மத் செய்கிறான். மலக்குகள் 70 தடவை துஆ செய்கிறார்கள் என ஹதீஸில் வருகிறது.

10. உமக்கு மறுமையில் தாகம் ஏற்படாமலிருக்க விரும் பினால் முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மீது அதிகமாக ஸலவாத் ஓதுவீராக! என நபி மூஸா (அலை) அவர்களை நோக்கி அல்லாஹ் கூறியதாக ஹஜ்ரத் கஃபுல் அஹ்பார் (ரலி) அறிவிக்கிறார்கள்.

11. ஸலவாத் சொல்பவர் நாளை அர்ஷின் நிழலில் இருப்பார் என நபிகளார் கூறினார்கள் என ஹஜ்ரத் அனஸ் (ரலி) அறிவிக்கிறார்கள்.

12. எனது மண்ணறைக்கு முன் வந்து ஸலவாத் சொல்வதை நானே செவியுறுகிறேன். தூரமாக உள்ளவர் ஸலவாத் கூறுவதை வானவர்கள் என்னிடம் சேர்ப்பிக்கிறார்கள் என நபிகளார் நவின்றார்கள்.

13. ஸலவாத் ஏற்றுக் கொள்ளப்பட்டால் 80 வருட (சிறிய) பாவங்கள் அழிந்துவிடும் என ஹதீஸில் வருகிறது.

14. ஸலவாத் சொல்லும் நபரின் பெயரைக் குறிப்பிட்டு என்னிடம் மலக்குகள் சேர்ப்பிக்கிறார்கள்.

15. அதிகமாக ஸலவாத் கூறுங்கள் அது பாவங்களிலிருந்து சுத்தப்படுத்தும், வெளிரங்க உள்ரங்க பொருள் - உயிர் அனைத்திலும் பரிசுத்தம் ஏற்படும்.

16. ஸலவாத் சொல்பவர்களுக்கு மலக்குகள் துஆ செய்கிறார் கள். எனவே அதிகமாக ஸலவாத் ஓதுங்கள்.

17. புத்தகங்களில் ஸலவாத் எழுதினால் அது இருக்கும்வரை மலக்குகள் எழுதியவருக்கு ஸலவாத் சொல்கிறார்கள்.

18. என் மீது தினம் 100 தடவை ஸலவாத் ஓதி வந்தால் 100 தேவைகள் நிறைவேறுகிறது. 30 உலகத் தேவைகள், 70 மறுமைத் தேவைகள்.

19. என் மீது காலையில் 10 தடவை மாலையில் 10 தடவை ஸலவாத் ஓதி வந்தால் மறுமையில் அவருக்கு பரிந்துரை செய்வேன்.

20. 1000 தடவை ஸலவாத் ஓதியவர் சொர்க்கத்தில் உள்ள தன் தங்கும் இடத்தைப் பார்க்காமல் மரணமடைய மாட்டார்.

21. என் மீது அதிகம் ஸலவாத் ஓதியவர் மறுமை நாளின் அபாயங்களிலிருந்து பாதுகாப்புப் பெறுவார்.

## பிரிவு 4.

## நபி ஸலவாத்தின் தனிப்பெரும் பயன்கள்

1. ஸலவாத் கூறாமல் கேட்கும் துஆ கபூலாவதில்லை.
2. ஸலவாத் சொல்லாவிட்டால் துஆ வானத்திற்கும், பூமிக்கும் இடையில் நிற்கிறது.
3. காதில் இரைச்சல் ஏற்பட்டால் ஸலவாத் ஓதுங்கள்.
4. பொருளாதார விருத்தி ஏற்பட நாடினால் இந்த ஸலவாத்தை ஓதவும்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ عَبْدِكَ وَرَسُوْلِكَ وَصَلِّ عَلَى

الْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنَاتِ وَالْمُسْلِمِيْنَ وَالْمُسْلِمَاتِ

5. கால் தூங்கி விட்டால் ஸலவாத் ஓதினால் தூக்கம் நீங்கி விடும்.
6. ஹஜ்ரத் இப்னு உமரின் கால் தூங்கியது; ஸலவாத் ஓதினார்; சரியாகிவிட்டது.
7. தேவைகள் நிறைவேற ஸலவாத் ஓதுங்கள்.
8. ஸலவாத் ஓதி வந்தால் நினைவாற்றல் உருவாகிறது.

9. ஏதாவது ஒன்று மறந்துவிடும் போது ஸலவாத் கூறினால் நினைவு வந்துவிடும்.

10. அதிகம் ஸலவாத் ஓதிவருபவருக்கு நபி பெருமானாரை கனவில் தரிசிக்கும் பெரும் பாக்கியம் கிடைக்கிறது.

ஷைகு அப்துல் ஹக் திஹ்லவீ (ரஹ்) எழுதியாவது: வெள்ளி இரவு இரண்டு ரக்அத் தொழ வேண்டும். ஒவ்வொரு ரக்அத்திலும் 11 தடவை ஆயத்துல் குர்ஸி, 11 தடவை குல்ஹுவல்லாஹ் ஓத வேண்டும். ஸலாம் கொடுத்த பிறகு கீழ்வரும் ஸலவாத்தை 100 தடவை ஓத வேண்டும். இன்ஷா அல்லாஹ் மூன்று வாரத்தில் கனவில் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களின் ஜியாரத் நஸீபாகும்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدِنِ النَّبِيِّ الْاُمِّيِّ وَ آلِهٖ وَ اَصْحَابِهٖ

وَ سَلِّمْ

இதேபோல் இரு ரக்அத் தொழ வேண்டும். ஒவ்வொரு ரக்அத்திலும் அல்ஹம்திற்கு பிறகு 25 தடவை குல்ஹுவல்லாஹ் ஓத வேண்டும். ஸலாமிற்கு பிறகு கீழ் வரும் ஸலவாத்தை 1000 தடவை ஓதினால் கனவில் நபியவர்களின் தீதார் கிடைக்கும்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدِنِ النَّبِيِّ الْاُمِّيِّ وَ آلِهٖ وَ اَصْحَابِهٖ

وَ سَلِّمْ

இரவு தூங்கும் முன் பின் வரும் ஸலவாத்தை 70 தடவை ஓதி வந்தால் கனவில் அண்ணல் எம் பெருமானார் ரஹ்மதுல்லில் ஆலமீன் முஹம்மது ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரிசிக்கலாம்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ بَحْرِ اَنْوَارِكَ وَ
مَعْدَنِ اَسْرَارِكَ وَ لِسَانِ حُجَّتِكَ وَ عَرُوْسِ
مَمْلَكَتِكَ وَ اِمَامِ حَضْرَتِكَ وَ طِرَازِ مُلْكِكَ وَ
خَزَائِنِ رَحْمَتِكَ وَ طَرِيْقِ شَرِيْعَتِكَ الْمُتَلَذِّذِ
بِتَوْحِيْدِكَ اِنْسَانِ عَيْنِ الْوُجُوْدِ وَالسَّبَبِ فِيْ كُلِّ
مَوْجُوْدٍ عَيْنِ اَعْيَانِ خَلْقِكَ الْمُتَقَدِّمِ مِنْ نُّوْرِ
ضِيَائِكَ صَلٰوةً تَدُوْمُ بِدَوَامِكَ وَ تَبْقٰى بِبَقَائِكَ
لَا مُنْتَهٰى لَهَا دُوْنَ عِلْمِكَ صَلٰوةً تُرْضِيْكَ وَ
تُرْضِيْهِ وَ تَرْضٰى بِهَا عَنَّا يَا رَبَّ الْعَالَمِيْنَ*

கீழ் வரும் துஆவை தூங்கும் முன் சில தடவை ஓதி வந்தால் நம் நபியை கனவில் பார்க்கலாம்.

اَللّٰهُمَّ رَبَّ الْحِلِّ وَالْحَرَمِ وَرَبَّ الْبَيْتِ الْحَرَامِ
وَ رَبَّ الرُّكْنِ وَالْمَقَامِ اَبْلِغْ لِرُوْحِ سَيِّدِنَا وَ
مَوْلَانَا مُحَمَّدٍ مِنَّا السَّلَامَ

குறிப்பு : ஸலவாத் ஓதுவதுடன் அளவு கடந்த ஆர்வமும் இருக்க வேண்டும்.

வெளிரங்க, உள்ரங்க பாவங்களிலிருந்து தவிர்ந்து இருக்க வேண்டும்.

விரைவில் நஸீப் கிடைக்கும்.

## பிரிவு 5.

## ஸலவாத் பற்றிய நிகழ்ச்சிகள்

1. மறுமையில் மீஜான் தராசில் நன்மை குறைவாக இருந்தால் நம் பெருமானார் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் நாம் ஸலவாத் ஓதிய நன்மையின் சீட்டை தராசில் போடுவார்கள். அதனால் நன்மையின் தட்டு கனக்கும்.

2. உமர் இப்னு அப்துல் அஜீஸ் (ரஹ்) அவர்கள் சிரியாவி லிருந்து, மதீனாவுக்கு தூதுவரை அனுப்பி ரவ்ழாவில் ஸலாமை எத்தி வைக்க சொல்வார்கள்.

3. நான் ஓதிய இந்த கீழ்வரும் ஸலவாத்தின் பரக்கத்தால் மன்னிப்பும், மதிப்பும் கிடைத்தது என கனவில் தெரிவித் துள்ளார்கள்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ كُلَّمَا ذَكَرَهُ الذَّاكِرُوْنَ وَ

كُلَّمَا غَفَلَ عَنْ ذِكْرِهِ الْغَافِلُوْنَ *

4. மூஸா என்ற கண் தெரியாத பெரியார் கூறுகிறார், நான் ஒரு முறை கப்பல் பயணம் செய்தபோது கப்பல் மூழ்க துவங்கியது. அப்பொழுது எனக்கு சிறு தூக்கம் ஏற்பட்டது. பெருமானார் தோன்றி இந்த ஸலவாத்தை இங்குள்ள யாவரும் 1000 தடவை ஓதுங்கள் என்றார்கள். அதன்படி நாங்கள் ஓதத்துவங்கினோம். 300 தடவை ஓதி இருப்போம் கப்பல் பாதுகாக்கப்பட்டது.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ صَلٰوةً تُنْجِيْنَا بِهَا مِنْ جَمِيْعِ الْأَهْوَالِ وَالْآفَاتِ وَ تَقْضِيْ لَنَا بِهَا جَمِيْعَ الْحَاجَاتِ وَ تُطَهِّرُنَا بِهَا مِنْ جَمِيْعِ السَّيِّاٰتِ وَ تَرْفَعُنَا بِهَا اَعْلَى الدَّرَجَاتِ وَ تُبَلِّغُنَا بِهَا اَقْصَى الْغَايَاتِ مِنْ جَمِيْعِ الْخَيْرَاتِ فِى الْحَيَاةِ وَبَعْدَ الْمَمَاتِ

5. நான் புத்தகம் எழுதும்போது பெருமானார் பெயர் வந்தால்

صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

என முழுவதுமாக எழுதி வந்தேன். இதனால் அல்லாஹ் எனக்கு சொர்க்கத்தை கொடுத்தான் என கனவில் எனது நண்பர் கூறினார் என ஒரு பெரியார் கூறியுள்ளார்.

6. நான் ஒரு பயணத்தில் ஒரு கிணற்றில் தண்ணீர் எடுக்கச் சென்றேன். வாளியும், கயிறும் இல்லாமல் செய்வதறியாது நின்றிருந்தேன். அங்கு வந்த ஒரு சிறுமி கிணற்றில் உமிழ் நீரை உமிழ்ந்தாள். நீர் மேலே வந்துவிட்டது. இது எப்படி? என அச்சிறுமியிடம் ஆச்சரியப்பட்டு கேட்டதற்கு அச் சிறுமி இது ஸலவாத் ஓதுவதன் பயனாகும் என்றார். இதற் குப் பிறகுதான் நான் 'தலாயிலுல் கைராத்' என்ற ஸலவாத் நூலை தொகுத்தேன் என அதன் ஆசிரியர் கூறுகிறார்.

7. தலாயிலுல் கைராத் உடைய ஆசிரியர் அடக்கப்பட்ட மண்ணறையிலிருந்து நறுமணம் கமழ்ந்து கொண்டிருக் கிறது.

8. லக்னோவில் ஒரு எழுத்தர் இருந்தார். அவர் தினம் எழுத்து வேலையை துவங்குவதற்குமுன் ஒரு நோட்டில் ஒரு தடவை ஸலவாத் எழுதிவிடும் பழக்கமுடையவராக இருந்தார். அவர் மரண நேரம் வந்தபோது மறுமையை பயந்து எனது நிலை அங்கு என்ன ஆகுமோ என சொன்னார். அப்பொழுது அங்கு ஓர் மஜ்தூப் - இறை காதலர் வந்து சொன்னார், ஏன் தம்பி பயப்படுகிறாய்? நீ ஸலவாத் எழுதிவைத்த குறிப்பேடு அல்லாஹ்விடம் சமர்ப்பிக்கப்பட்டுவிட்டது அதில் அங்கீகரிக்கப்பட்டது என பொறிக்கப்பட்டுள்ளது. இந்த நிகழ்ச்சியை நம்பகமான எனது நண்பர் ஒருவர் கூறினார்.

9. மௌலானா பைஜுல் ஹஸன் சஹாரன்பூர் மரணமான அறையிலிருந்து 1 மாதம் வரை நறுமணம் கமழ்ந்து கொண் டிருந்தது. இதை மௌலானா காசிம் நானூதவி (ரஹ்) அவர்களிடம் எடுத்துச் சொன்னபோது இது ஸலவாத்தின் மகிமை என்றார்கள். ஆம் ஒவ்வொரு வெள்ளி இரவு முழுவதும் பைஜுல் ஹஜன் ஹஜ்ரத் அவர்கள் (அந்த அறையில்) ஸலவாத் ஓதுபவராக இருந்துள்ளார்.

இந்த தகவலை ஹஜ்ரத்தின் மருமகன் என்னிடம் கூறினார்.

10. வானத்தில் ஒருவர் வானவர்களுடன் சேர்ந்து தொழுது கொண்டிருப்பதாக கனவில் கண்டு இதற்கு காரணம் என்ன என்று கேட்டேன். அதற்கு அவர் நான் 10 லட்சம் ஹதீஸ்களை எழுதியுள்ளேன். பெருமானாரின் திருநாமம் வரும் போதெல்லாம் முழு ஸலவாத்தையும் எழுதி வந்தேன். இதனால் இந்த அந்தஸ்து கிடைத்துள்ளது என்றார், என அபூஜர்ஆ (ரஹ்) கூறுகிறார்கள்.

11. இமாம் ஷாபியீ (ரஹ்) அவர்களை ஒருவர் கனவில் பார்த்த போது கீழ்வரும் 5 ஸலவாத்தையும் வெள்ளிக் கிழமை இரவு ஓதி வந்தேன். இதன் பரகத்தால் எனக்கு மன்னிப்பு கிடைத்தது என்று சொன்னார்கள்.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ بِعَدَدِ مَنْ صَلّٰى عَلَيْهِ وَ
صَلِّ عَلٰى مُحَمَّدٍ بِعَدَدِ مَنْ لَّمْ يُصَلِّ عَلَيْهِ وَ صَلِّ
عَلٰى مُحَمَّدٍ كَمَا اَمَرْتَ بِالصَّلٰوةِ عَلَيْهِ وَ صَلِّ عَلٰى
مُحَمَّدٍ كَمَا تُحِبُّ اَنْ يُّصَلّٰى عَلَيْهِ وَ صَلِّ عَلٰى
مُحَمَّدٍ كَمَا يَنْبَغِي اَنْ يُّصَلّٰى عَلَيْهِ

12. ஒரு நல்ல மனிதரை கனவில் ஒருவர் பார்த்து உனது நிலை என்ன? என்று கேட்டபோது அல்லாஹ் என்னை எனது பாவ எண்ணிக்கையைவிட அதிகமாக ஸலவாத் சொல்லியிருந்ததால் என்னை விசாரணை செய்ய வேண் டாம் என மலக்குகளிடம் கூறி என் மீது இரக்கப்பட்டு மன்னித்து சொர்க்கத்தில் நுழைய வைத்தான் என்றார்.

13. ஒருவர் இரவு படுக்கும்முன் குறிப்பிட்ட எண்ணிக் கையில் ஸலவாத் ஓதுபவராக இருந்து வந்தார். ஒருநாள் இரவு கனவில் நபி பெருமானாரை சந்தித்தார். பெருமானார் ஸலவாத் ஓதி வந்த உனது வாயைக் கொடு என்றார்கள். அவர் வெட்கப்பட்டு கொண்டு கன்னத்தைக் காண்பித்தார். பெருமானார் அதில் முத்தம் தந்தார்கள். அவர் விழித்துப் பார்த்தால் வீடு முழுவதும் கஸ்தூரி மணம் கமழ்கிறது. இந்த செய்தியை ஷைகு இப்னு ஹஜர் மக்கீ (ரஹ்) அவர்கள் எழுதியுள்ளார்கள்.

14. ஹவ்வா (அலை) அவர்களைத் தொட ஹஜ்ரத் ஆதம் (அலை) கையை நீட்டியபோது மூன்று தடவை (ஒரு ரிவாயத்தில் 20 தடவை) ஸலவாத் ஓதாமல் தொடாதீர்கள் என வானவர்கள் கூறினார்கள்.

## பிரிவு 6.

## ஸலவாத்தின் சட்டங்கள்.

1. ஆயுளில் ஒரு தடவையேனும் ஸலவாத் சொல்வது கடமை.

2. ஒரு சபையின் பல தடவை பெருமானாரின் பெயர் கேட்டால் - சொன்னால் ஒரு தடவை ஸலவாத் கூறுவது அவசியம். ஒவ்வொரு தடவையும் கூறுவது விரும்பத்தக்கது.

3. தொழுகையில் கடைசி இருப்பைத் தவிர மற்ற இடத்தில் ஸலவாத் கூறுவது மக்ரூஹ்.

4. வெள்ளிக்கிழமை குத்பாவில்

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا صَلُّوا عَلَيْهِ وَسَلِّمُوا تَسْلِيمًا

என்ற ஆயத்தை கேட்கும் போது நாவை அசைக்காமல் மனதிலேயே ஸலவாத் கூற வேண்டும்.

5. உளூவுடன் ஸலவாத் கூறுவது மிகமிக நன்று.

6. நபிமார்களைத் தவிர வேறு யாருக்கும் தனிப்பட்ட முறை யில் ஸலவாத் கூறக்கூடாது.

7. உலக ஆதாயம் பெறும் இடங்களில் ஸலவாத் ஓதக் கூடாது. (உதாரணமாக ஸலவாத் சப்தமிட்டு கூறி மக்கள் கவனத்தை ஈர்ப்பது)

4. துஆவுக்கு முன்னும், பின்னும் ஸலவாத் சேர்ப்பதால் கண்டிப்பாக ஸலவாத் ஏற்கப்படும். அதன் பொருட்டால் இடையில் உள்ள துஆவும் ஏற்கப்படும்.

5. ஒரு தடவை ஸலவாத் சொன்னால் 10 ரஹ்மத் நமக்கு இறங்குகிறது. இதேபோல் நபிகளாரைப் பற்றி அவ மரியாதையாக ஒரு சொல் சொன்னால் (அல்லாஹ் பாது காப்பானாக) இறைவனின் 10 சாபம் ஏற்படுகிறது.

## பிரிவு 10.
## ஸலவாத்தின் வாசகங்கள்

பலவகையான ஸலவாத் உள்ளன. இதற்கு ஓர் எடுத்துக் காட்டுதான் தலாயிலுல் கைராத் என்ற நூல். ஹதீஸ்களில் 25 ஸலவாத் வாசகங்களும் 15 ஸலாம் வாசகங்களும் வந்துள்ளன.

40 ஹதீஸ்களை பிறருக்கு எத்தி வைத்தால் அல்லாஹ் ஆலிம்களுடன் எழுப்புவான்; நான் சிபாரிசும் செய்வேன் என பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறியுள்ளார் கள்.

ஹதீஸ்களில் வந்துள்ள நாற்பது ஸலாத் - ஸலாம் வாசகங்களை தினம் ஓதி வந்தால் ஹதீஸில் வந்துள்ள எல்லா பரகத்துக்களும் கிடைக்கும்.

பரக்கத்திற்கு இரு ஆயத்துகளை எழுதப்படுகிறது.

سَلَامٌ عَلَىٰ عِبَادِهِ الَّذِينَ اصْطَفَىٰ

سَلَامٌ عَلَى الْمُرْسَلِينَ

★ ★ ★

بسم الله الرحمن الرحيم

# துஆ செய்ய வேண்டுகிறோம்

அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்)

எங்களது பெற்றோர்

மர்ஹூம் ஹாஜி

**மூ. ஆஸ் முஹம்மது ராவுத்தர்,**

மர்ஹூமா ஹாஜியா

**ஆ. மர்யம் பீவீ**

ஆகியோரின் மஃபிரத்திற்காக துஆ செய்யும்படி

அன்புடன் வேண்டுகிறோம்.

இப்படிக்கு,

அல்ஹாஜ் **ஆ. ஸைய்யது முஹம்மது**

மற்றும்

**குடும்பத்தினர்கள்**